23rd August 1960]

*Palmyra fibre products*

* 392 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) பனை நாரிலிருந்து (Palmyra fibre), செய்யப்படும் என்னென்ன சாமான்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் படுகின்றன?

(ஆ) 1959-60-ல் எத்தனை ரூபாய் மதிப்புள்ள சாமான்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Finished articles from palmyra fibre are not exported to foreign countries.

(*b*) Does not arise.

SRI P. G. MANICKAM : வெளிநாடுகளிலிருந்து மேற்கொண்டு பொருள்கள் தேவை என்று சர்க்காருக்கு ஏதாவது தெரிவிக்கப் பட்டிருக்கிறதா? அவ்வாறு தெரிவிக்கப்பட்டிருந்தால், எந்தெந்த வெளிநாடுகளிலிருந்து தெரிவிக்கப்பட்டது என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON SRI M. BHAKTAVATSALAM : உற்பத்தி ஆகின்ற சாமான்கள் இங்கேயே விற்கப்பட்டு வருகின்றன. அதில் ஒரு கஷ்டமும் இல்லை. மேற்கொண்டு பொருள்கள் இருக்குமானால், அவைகளை வெளி நாடுகளில் விற்பதுபற்றி பரிசீலனை செய்யப் படும்.

SRI A. VEDARATHNAM : இங்கே தயாரிக்கப்படுகிற பனை நார்கள் அவ்வளவும் இங்கேயே பயன்படுத்தப்பட்டு வருகிறதா? இல்லையானால், அவை என்ன ஆகின்றன? அதிகமாக உற்பத்தி ஆகின்ற இதை விருத்தி செய்வதற்கு ஏற்பாடு செய்யப்படுமா? அதிலும் குறிப்பாக வேதாரண்யத்தில் இந்தத் தொழில் ஆரம்பிக் கப்பட்டு, பயிற்சி அளிக்கப்பட்டு, அப்படியே மேல்நடத்தப் படாமல் கைவிடப்பட்டிருக்கிறது. அதையெல்லாம் துவக்கி ஆரம்பித்து வைக்க சர்க்கார் முன்வருவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பல்மைரா நாரைப் பொறுத்த மட்டில், அதாவது 'பல்மைரா பைபர்' இப்பொழுது கூட, 'யுனைடெட் கிங்டெம்', அமெரிக்கா, ஜப்பான், சைனா போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வருகிறது. ஆனால் பனை நாரினால் செய்யப்படும் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படவில்லை என்று சொன்னேன்.

*Atomic Power Station*

* 393 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the Government have received any reply from the Union Government to their request to establish an Atomic Power Station?